# விளக்கின் நினைவாய் எஞ்சிய வெளிச்சம்

ஈரோடு தமிழன்பன்

# LINGERING LIGHT IN MEMORY OF THE LAMP

*Translation Prof.* **K. CHELLAPPAN**



# விளக்கின் நினைவாய் எஞ்சிய வெளிச்சம்

# LINGERING LIGHT IN MEMORY OF THE LAMP


ஈரோடு தமிழன்பன்

English Translation

Professor **K. Chellappan**



வெளியீடு

**ஒருதுளிக் கவிதை**

புதுச்சேரி

## நூல் விவரக் குறிப்புகள்

*நூற்பெயர்*
விளக்கின் நினைவாய்
எஞ்சிய வெளிச்சம்
LINGERING LIGHT
IN MEMORY OF THE LAMP

*ஆசிரியர்*
ஈரோடு தமிழன்பன்

*English Translation*
Professor K. Chellappan

*பதிப்பு*
முதற் பதிப்பு : திசம்பர் 2020

*பக்கங்கள் :* 48

*வடிவமைப்பும் மெய்ப்புத் திருத்தமும்*
'விழிகள்' தி. நடராசன்
9444265152

*அச்சும் வெளியீடும்*
ஒரு துளிக் கவிதை
புதுச்சேரி
agan123@ymail.com

*விலை:* ரூ. 50

# என்னுரை

சாகித்திய அகாதெமி அண்ணல் காந்தியின் பிறந்த நாளையொட்டி 2.10.2020 அன்று தன் தென்மண்டலக் கிளைச் சார்பில் கவியரங்கம் ஏற்பாடு செய்து, தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு மொழிக் கவிஞர்களை அதில் பங்கேற்க அழைத்திருந்தது. தமிழ்மொழிக் கவிஞனாகப் பங்கேற்று நான் வழங்கிய கவிதையின் முழுவடிவம் அன்று இடம் பெறவில்லை. காணொலி வாயிலாக நடத்தப்பட்டதால் தொழில்நுட்பம் அன்று ஒத்துழைக்கத் தடுமாறியது.

முழுக் கவிதையில் காந்தியோடு தமிழ் மொழியையும் தமிழ்நாட்டு வேளாண் மக்களையும் தந்தை பெரியாரையும் தில்லையாடி வள்ளியம்மையையும் இடம்பெறச் செய்திருந்தேன். அக்கவிதை முழுமையாக ஒரு சிறு நூலாகும் தகுதியோடு இருப்பதாக நண்பர்கள் கூறியதோடு ஆங்கிலப் பெயர்ப்பும் தேவை என்றனர்.

என் கவிதைகள் குறித்து ஆங்கிலத்தில் சிறந்த திறனாய்வு நூல் எழுதியவரும் (Universal Vision and a dialogue with Tradition in Tamilanban's poetry),

என் 'இரவுப் பாடகன்' (The Night Singer) என்னும் கவிதை நூலை ஆங்கிலத்தில் அழகுற மொழியாக்கம் செய்தவருமான பேராசிரியர் கா.செல்லப்பன் இக் குறு நூலையும் ஏற்றம் பெருக மொழி மாற்றம் செய்துள்ளார்.

ஹைக்கூ முருகேசு மூலமாக எனக்கு அறிமுகமான தூரிகைப் புலவர் தமிழ்ப்பித்தன் ஓவியக் கொடையை உள்ளன்போடு புரிந்துள்ளார். வழக்கம் போல் விழிகள் நடராசன் அழகுச் சரக்கை அள்ளித் தெளித்துள்ளார்.

என் கவிதை மகன் தியாக. அமிர்தகணேசனை உடையவராகப்பெற்ற ஒருதுளிக் கவிதை வெளியீட்டகம் களியீட்டகமாகி இதனை வாசகர் கரங்களுக்கு வழங்குகிறது. இவர்களுக்கெல்லாம் என் நன்றி.

அடுக்கி வைக்கும் ஆயிரம் நன்றிகள் எடுத்துப் படிக்கும் எல்லாருக்கும்.

# Recreation of Gandhian Reality

Gandhi is probably the greatest phenomenon not only in the last century but in the entire human history. He was a miracle of simplicity and converted non-action itself into a mode of action. Truth and Non-violence were his twin weapons in his great struggle for freedom and he simply disarmed a mighty empire with a smile and won a war without sword or shedding blood.

Erode Tamilanban, a distinguished Tamil Poet of the Post Bharathi-Bharathidan era has rediscovered Gandhi in his beautiful poem *Lingering Light in Memory of the Lamp* written for the Sahitya Akademi in connection with the 150th Birthday Celebration of Gandhi. In this, he says that when "India took up Gandhi himself as a weapon, the foe dropped his weapons".

Non-violence was the gift of Gandhi to the entire world, which helped many countries like Africa to win their freedom. That is why he became not only a national institution, but a universal symbol. This has also helped to solve problems across the world peacefully.

Gandhi revolutionised the very concept of revolution by making non-violence itself a mode of struggle. We can say that he made a negation of negation in Marxist terms by making non-violence a weapon.

But unfortunately and chronically, he became a victim to a fanatic's bullet. As Tamilanban says beautifully, "One man wove a garland of bullets, to decorate his chest". Even Godse is said to have given a gift of bullet to Gandhi and Gandhi accepted it without any anger and thereby triumphed over evil with love.

Gandhi loved Tamilians very much and he refers to Tamilans more than any other people in his Autobiography. In his struggles in South Africa it is Tamils who stood close to him and Gandhi refers to the selfless hard work of Tamils in South Africa. Thillaiyadi Valliyammai's courage and spirit of sacrifice moved him most. Tamilanban calls her Gandhi's pet daughter.

Gandhi also loved Tamilnadu very much and he visited it a number of times and it is only during one of his visits to Tamilnadu, he chose to wear simple, minimum dress seeing the plight of people without even the bare minimum clothes. Gandhi acquired a true identity by identifying himself with the poor villagers in Tamilnadu. As Tamilanban puts it, only the hero of our fields selected the dress that gave him identity.

Above all Gandhi loved Tamil language and Thirukkural in particular. He was so impressed by the practical but profound ethics of Thirukkural that he said that he wanted to be born a Tamilian to study Thirukkural. Gandhi's love for truth and non-violence was inspired by Tolstoy who was inspired by Thirukkural.

Tamil also has returned that love with abundant creativity. Gandhi never wrote poetry, but his life itself was great poetry. He was also the source of good poetry in several languages, including Tamil. Tamilanban says that on every January 30, Gandhi who is in statues is shot again and again. But he is also reborn again and again in good poetry.

Gandhi's life was a continuous search for Truth and Tamilanban has 'translated' Gandhian Truth into beautiful Tamil poetry and mine is a translation of that translation, just as poetry is an imitation of imitation according to Plato. But as Aristotle said imitation can also recover reality in its own way. I hope my translation as well as Tamilanban's creation have recreated Gandhian reality each in its own way.

**K. CHELLAPPAN**





# விளக்கின் நினைவாய் எஞ்சிய வெளிச்சம்

ஒவ்வோர் ஆண்டும்
அக்டோபர் இரண்டாம் நாள்
உத்தமர் காந்தியை நினைக்கிறோம்
ஒவ்வோர் ஆண்டும் சனவரி முப்பதாம் நாளும்
அவரை நாம் நினைக்கிறோம்

காந்தி அண்ணலோ
தப்பாமல் இந்தியாவை இந்தியரை
எப்போதும் நினைக்கிறார்
விளக்கு அணைந்தபிறகும்
வெளிச்ச ஞாபகம் ஒளிவிட்டுக் கொண்டே
இருப்பதுபோல.



# Lingering Light in Memory of the Lamp

Every year
Only on October 2nd
We think of Noble Gandhi.
Every year
On January 30th also
We remember him.

But, venerable Gandhi
Thinks always of India and Indians
Without fail
Just as the lingering light
in memory of the lamp,
Even after its extinguishment.



எளிமை
உண்மையின் சிறகுகளில் இருந்தது
காந்தியின் தோற்றத்திலும் இருந்தது
கனிவு
மலர்களின் இதயங்களில் இருக்கும்முன்
காந்தியின்
சொற்களுக்குச் சொந்தமாக இருந்தது

Simplicity dwelt in the wings of Truth
It was there in Gandhi's look also
Before occupying the hearts of flowers
Tenderness
was in the possession of
Gandhi's words.





காந்தி பிறந்த நாளில்மட்டும்
கனவின் காதுகளில் நமக்குக் கைராட்டை
ஓசை கேட்கிறது

அன்றுமட்டும்தான்
ராஜ்காட்டில் மவுன நோன்பிருக்கும்
காந்தியின் சாம்பல் காதுகளில்
'வைஷ்ணவ ஜனதோ' பாடல் வந்து விழுகிறது

எந்த
வாழ்வைத் தொட்டால்
தனக்கு வாழ்வு கிடைக்கும் என்று தேடிய
வரலாறு
சபர்மதி மண்ணைத் தொட்டதும்
தொட்டது வெற்றியை



Only on the birthday of Gandhi
The sound of the handspinning wheel
Is heard in dream's ears.

Only on that day
In the ears of Gandhiji's ashes
Observing the austerity of silence,
The song 'Vaishnava Janatho' falls.

History which was seeking its life
By touching other lives
Touched Victory
When it touched the soil of Sabarmati



எந்தக்
கண்களைச் சந்தித்தால்
இடம் கிடைக்கும் என்றலைந்த
மானுடக் கருணை
அடையாளம் தெரிந்து போனது
போர்பந்தருக்கு.

எளிமை
உண்மையின் சிறகுகளில் இருந்தது
காந்தியின் தோற்றத்திலும் இருந்தது
கனிவு
மலர்களின் இதயங்களில் இருக்கும்முன்
காந்தியின்
சொற்களுக்குச் சொந்தமாக இருந்தது



Human compassion
which was wandering
in search of the eyes
for its abode
Went to Porbandar
finding its identity.

Simplicity dwelt in the wings of Truth
It was there in
Gandhi's appearance also
Before occupying the hearts of flowers
Compassion belonged to
Gandhi's words.





அவருடைய
மணிமொழிகளைக்
கங்கை அலைகள் அறியும்
பொதிகைப் பூந்தென்றலுக்கும் நன்றாகப் புரியும்

அறவழி நாயகனான அண்ணலுக்கு
எங்கள்
வயல்வெளி நாயகனே
அடையாள ஆடையைத் தேர்வு செய்தான்

அவருடைய
செல்ல மகள் தில்லையாடி வள்ளியம்மை,
ஆப்பிரிக்கப் போராட்டத்திற்குப்
பூப்பறித்துப் போடவில்லை காயப்
புண் பறித்துப் போட்டாள்.



His golden words the waves of
The Ganges knew
The gentle breeze of Podhigai also
Understands it.

To the Annal who was the hero
of the path of Dharma (Aram)
Only the hero of our fields selected
the dress
That gave him identity

His pet daughter
Thillaiyadi Valliyammai
Did not pluck and offer flowers
but only wounds
To the African struggle.



எந்த
வாழ்வைத் தொட்டால்
தனக்கு வாழ்வு கிடைக்கும் என்று தேடிய
வரலாறு
சபர்மதி மண்ணைத் தொட்டதும்
தொட்டது வெற்றியை.

History which was seeking its life
By touching other lives
Touched Victory
When it touched the soil of Sabarmati





மோ.க. காந்தி
என்று கையெழுத்திட்ட காந்தியின்
விரல்களை
வள்ளுவர் முத்தமிட்டார்
பாட்டுக்கொரு புலவன் பாரதியும் முத்தமிட்டார்.

இந்த நாட்டுக்கே
காந்தி நாடு என்று பெயர் சூட்டச் சொன்னார்
பகுத்தறிவு மகரிஷி
தந்தை பெரியார்.

விடுதலைப் போராட்டத்திற்கு
ஆயுதங்களைக் குருதிப் பட்டறைகளில்
வடித்தெடுக்கவில்லை
கண்ணீரின் ஆழத்திலிருந்தும் மரணக்
கணக்குகளிலிருந்தும் தயாரிக்கவில்லை அவர்.



The fingers which signed as
Mo.Ka. Gandhi,
Valluvar kissed.
The rare poet of songs, Bharathi
also kissed.

Rationalist Rishi,
Thandhai Periyar wanted to rename
this land
As the Gandhi Nation

He did not forge his weapons
for freedom struggle
In the smithies of blood.
He did not prepare them from
the depths of tears
And death accounts.





அன்போடும்
அருளோடும் கலந்துபேசித் தளவாடங்கள்
தயாரித்தார்.
தணிக்கை செய்ய அறத்தின் கைகளில்
அதிகாரம் தந்தார்.

ஒத்துழையாமை இயக்கத்தின்
உள்ளடுக்குகளில்
வன்முறைக்குப் பயிற்சி வகுப்புகள்
ஒருநாளும் திறக்கப்பட்டதில்லை.



In consultation with
Love and compassion
He prepared arms
And empowered the hands of Dharma
To scrutinize them.

In the inner layers of Non-Cooperation movement
Coaching classes were never opened
for violence.



## விளக்கின் நினைவாய் எஞ்சிய வெளிச்சம்

எந்தப்
பறவையின் கூட்டிலும்
வில்லம்புக்கெதிரான கருவிகள் இருப்பதுண்டோ?
அலகுகளால் சிறகுகளால்
போராடும்
இயற்கை தந்த ஆயுதங்கள் அவை.

எந்த
விலங்கின் குகையுள்ளும்
துப்பாக்கிகளுக்குத் தோட்டாக்களுக்கு
எதிராக ஆயுதங்கள் திரட்டி வைக்கப்
பட்டதுண்டோ?

தறுதலைகள்
எதிர்ப்பட்டுத் தனித்து வரும் பெண்
தவிக்கும்போது
இயற்கை ஆயுதங்களான
கைகளை, கால்களைக் கூரிய
நகங்களோடு சீறுக என்றவர் காந்தி.



In the nest of any bird, are there
arms against
The bow and arrow?
Will fight with the peaks and wings
Which are Nature's gifts of weapons.

Were weapons amassed against guns
and bullets
In the dens of any beast?

When a girl is struggling alone
Encountering evil men
Fight with fury with the sharp nails
of hands and legs
Which are Nature's weapons.





காந்தி கண்ட கனவுகள்
காந்தியோடு
அக்டோபர் இரண்டில் நாட்டுக்குள் வந்து
தலைகுனிந்து திரும்புகின்றன

எல்லா ஜனவரி முப்பதிலும்
திரும்பத் திரும்பச் சிலைக்குள் இருக்கும் காந்தி
சுடப்படுகிறார்

தவறுகளுக்குத்
தங்கமுலாம் பூசி மறைப்பவர்களே
தலைவர்களாகத் தகதகத்து
மின்னுகிறார்கள் இக்காலம்.

தவறு செய்துவிட்டேன்
என்று மறைக்காமல் மழுப்பாமல்
உலகுக்குச் சொன்னவர் காந்தி.



The dreams of Gandhi come to the nation
On October 2nd along with Gandhi
And return with him with heads hung low

On every January 30th
Gandhi who is in statues is shot
again and again.

These days only those who cover
The mistakes by gilding with gold,
Glitter gloriously
As leaders.

Gandhi proclaimed to the world,
'I made' a blunder
Without hiding or evasion.



## விளக்கின் நினைவாய் எஞ்சிய வெளிச்சம்

இந்த நடத்தை
இலக்கணம்தான் லூதர்கிங் மனத்தில்
இலக்கியமாய்க் காந்தியை
எழுதி வைத்தது.

நினைக்கப்படும்
காந்தி இறந்த நாளாக இல்லாமற்போன
மரணங்கள்கூட
ஜனவரி முப்பதன்று
உயிர் தொடா நோன்பிருக்கும்.

மொழிகளின்
ஓசைகள்கூட அமைதியின்
ஆளுமையான அண்ணலை நினைத்து
அக்டோபர் 2 அன்று
நாகாத்து நோன்பிருக்கும்-
இப்படி
நமக்கேதும் உண்டா இவ்விரண்டு நாள்களில்?



Only such an ideal grammar
of Gandhi's conduct
Was written as literature in the mind of
Luther King.

Even the deaths which are not
remembered
like the death anniversary of Gandhi
will observe fast
to continue to live
on 30th January.

Even the sounds of languages will
observe austerity
Controlling their tongues
Thinking of Annal who was
The embodiment of peace
on October 2nd.
Is there anything for us
on these two days?





## பகுதி 2

# காந்திய ஆயுதம்

காந்தி என்பது
வினைச்சொற்களையே
இயக்கும் ஒரு பெயர்ச்சொல்

விளக்கின்
திரிகள் வெப்பத்தை
விலக்கி எரியும்போது
காந்தி வழியைக் கற்கிறது

ஆனால்
நாட்டுக்காகப் போராட
அணி வகுப்போர்
கைகளில் ஏந்தும் துப்பாக்கிகள்
தேசபக்தியின்
உச்சரிப்புகளே என்பதை
காந்தியாலும்
மறுக்க முடிந்ததில்லை



# PART II

## THE GANDHIAN WEAPON

The name Gandhi
is a noun
that activates verbs.

The lamp's wicks learn
the Gandhian way
When they burn without generating heat

But even Gandhi
Could not deny the fact that
The guns carried by
Those who stood in a row
To fight for the nation
Are also pronouncements of patriotism.



காந்தியையே
ஆயுதமாக இந்தியா ஏந்தியது
அந்நியன்
ஆயுதத்தைக் கீழே போட்டான்

India took up
Gandhi himself as a weapon
The foe (alien) dropped his weapons





கண்முன்னால்
பகத்சிங் சுகதேவுகளைக்
கண்டவர் அவர்.

கோடைக்காலத்தைக்
கைவிடும்படி
இயற்கையை வற்புறுத்தினால்
அது
வசந்தத்தில் வரும் மலர்களைத்
தடுத்துவிடலாம்.

போர் வேண்டாம்
என்று காந்தி சொல்லவில்லை
போரில் வன்முறை வேண்டாம்
என்றே சொன்னார்



He had seen before his very eyes
Bhagat Singh and Sughadevs

If Nature can be persuaded
To give up Summer
It may prevent the blossoms
of the Spring

Gandhi did not say:
'There should be no wars'
He only said:
'There should be no violence in wars'



## விளக்கின் நினைவாய் எஞ்சிய வெளிச்சம்

போராடுவோர்
தங்கள் ஆயுதத்தை
முடிவு செய்வதில்லை
அவர்களின் எதிரிகளே அதை
முடிவு செய்கின்றனர்

காந்தியையே
ஆயுதமாக இந்தியா ஏந்தியது
அந்நியன்
ஆயுதத்தைக் கீழே போட்டான்

அந்த வெற்றியைக்
கொண்டாடத்தான் அண்ணல்
மார்புக்குத்
தோட்டாக்களால் ஒருவன்
மாலை தொடுத்தான்.



Those who fight do not decide
Their weapons; only their foes
decide them

India took up
Gandhi himself as a weapon
The foe (alien) dropped his weapons

Only to celebrate that victory
One man wove a garland of bullets
To decorate the chest of Annal.



## விளக்கின் நினைவாய் எஞ்சிய வெளிச்சம்

காந்திக்குப்
பொய்களோடு பொருந்திப்
போக முடியவில்லை
வாய்மையின் இதயத் துடிப்பில்
வாழ்ந்து கொண்டிருந்ததால்

காந்திக்கு
ஆடம்பரத்தோடு
கூடிக் குலவ முடியவில்லை
வானத்தின்
நட்சத்திர விடுதிகள்
விருந்து அழைப்பை ஏற்காத
புல்லோடும் ஓடையோடும்
அல்லும் பகலும் வாழ்ந்து
பழகிப் போனதனால்

காந்தியின்
டால்ஸ்டாய்ப் பண்ணையில்
களைகள் வளரவில்லை
ஒருநாளும்
அறத்தின் பதியன்கள் வளராமல்
இருந்ததும் இல்லை



Gandhi could not compromise
With falsehood
As he was living
With the heartbeat of Truth

Gandhi could not mingle merrily
With pomp

As he was accustomed to live
day and night
And getting familiarized
with the blade of grass and
the flow of brook
He could not accept
the invitation for feast
In the Star Hotels of the sky

In Gandhi's Tolstoy farm
Weeds did not grow
But the seedlings of Dharma
Never failed to grow



விளக்கின் நினைவாய் எஞ்சிய வெளிச்சம்





போர் வேண்டாம்
என்று காந்தி சொல்லவில்லை
போரில் வன்முறை வேண்டாம்
என்றே சொன்னார்

Gandhi did not say:
'There should be no wars'
He only said:
'There should be no violence in wars'



ஆனால்
அவருடைய கண்ணாடியில்
சுதந்தர இந்தியா
தந்த காட்சிகளால் எண்ணற்ற
கீறல்கள்
கண்களைத் துடைத்துக்கொண்டார்
காட்சிகளைத்
துடைக்க முடியாமல் தவித்தார்

வன்முறை அறியாத
அவர் கைத்தடி அவரிடம்
விடுமுறை கேட்டு
விண்ணப்பம் போட்டது

நவகாளி யாத்திரையில்
பங்குகொண்ட இந்தியத் தாய்
பாதங்களின் காயங்கள்
இன்னும் ஆறவில்லை.



In his spectacles, there are innumerable
scratches
by the scenes displayed by free India
He rinsed his eyes but distressed
as he could not rub the scenes

His walking stick which knew
no violence
Sent an application asking for leave

The wounds inflicted in the feet
Of Mother India, who took part in the
Navakali pilgrimage
Have not healed yet





'சகோதரர் ஆயினும்
சண்டை செய்வோம்' என்று தன்
பாட்டு வரிகள்
மாறிப் போனதைக் கண்டு
பாரதி திடுக்கிட்டான்
பண் பெருக்கிய குருதியில்
இன்னும் என்ன
தேடுகிறானோ தெரியவில்லை.

தாகமெடுத்துத்
தண்ணீர்
தேடிக் கொண்டிருந்த
விக்கல் தேசம்
கண்ணீரில் மிதந்தது.
காந்தியின்
கடிகாரம் உடைந்து விழுந்தபோது
பகுபடாக் காலம்
அவரைத் தாங்கி மார்போடு
அணைத்துக் கொண்டது



Bharathi was shocked
That the words of his song
Had changed as:
'We will fight though we are brothers'
We do not know what he is searching
still in the wounds' overflowing blood

The nation which yearned for water
To quench its thirst was floating
in the flood of tears

The time that did not fragment
When his clock broke into pieces
Carried him affectionately
and embraced him
To bring him close to heart



விளக்கின் நினைவாய் எஞ்சிய வெளிச்சம்

வாழ்க்கையால்
எழுதப்பட்ட வள்ளுவ உரை
முற்றுப் பெற்றதைச்
சத்தியசோதனையின்
ஒவ்வொரு பக்கமும்
உலகுக்கு அறிவித்தது.



The completion of commentary
on Valluvam
Written by Life
was proclaiming to the world
On every page of
His Experiments with Truth.

---

சாகித்திய அகாதெமியின் தென்மண்டலக் கிளை
02.11.2020 அன்று நடத்திய பன்மொழிக் கவியரங்கில்
தமிழ் மொழிக் கவிஞனாகக் கலந்து கொண்டு வழங்கிய கவிதை.





மோ.க. காந்தி
என்று கையெழுத்திட்ட காந்தியின்
விரல்களை
வள்ளுவர் முத்தமிட்டார்
பாட்டுக்கொரு புலவன் பாரதியும் முத்தமிட்டார்.

இந்த நாட்டுக்கே
காந்தி நாடு என்று பெயர் சூட்டச் சொன்னார்
பகுத்தறிவு மகரிஷி
தந்தை பெரியார்.

விடுதலைப் போராட்டத்திற்கு
ஆயுதங்களைக் குருதிப் பட்டறைகளில்
வடித்தெடுக்கவில்லை
கண்ணீரின் ஆழத்திலிருந்தும் மரணக்
கணக்குகளிலிருந்தும் தயாரிக்கவில்லை அவர்.




ISBN: 978 81 950283 20




9443360007 | 9444265152

விலை ரூ.40